ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

பொதியமலையிலெழுந்தருளிய

# அகத்தியமகாமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# பஞ்சபட்சிசாஸ்திரம்

—*—

அதற்கிசைந்த சக்கரங்களும்

சங்கரனுர் உமாமயேஸ்வரிக்கு

அருளிச்செய்த

## ஞானசரநூல் சாஸ்திரம்.

மூலமும்-உரையும்.

இஃது

மைலம்,

சுப்பிரமணிய சுவாமிகளால்

பார்வையிடப்பட்டு,

சென்னை,

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1916

சென்னை ஆச்சாரப்பன் தெரு நெ-84.

உ

சிவமயம்.

சங்கரனார் திருவுளமகிழ்ந்து.

உமாமயேஸ்பரிக்கு அருளிச்செய்த

# ஞானசரநூல் சாஸ்திரம்.

மூலமும்-உரையும்.

---

காப்பு.

நேரிசை வெண்பா.

வாழ்த்துவாமுள்ளம் வருவிபாநெஞ்சமுன்பிற்
சூழ்ந்துவாமேன்மேற் றுதிசெய்வார்—தாழ்த்த
பரநூலைமற்றுமரப் பாலித்தருள்கூட்டுஞ்
சரநூலைபோதமுன்னோன் றாள்.

நாமகள் துதி.

உமைமாதுக்கீச னுரைத்தசரநூலில்
அமையாப்பொருளு மமையு—மெமையாளும்
புவிமடந்தைபூமடந்தை போதமெய்ஞானக்
கவிமடந்தையிக்கலைக்கோர் காப்பு.

அவையடக்கம்.

செப்பமனந்துணிந்த சீர்முன்னோர்சொற்சரநூ
லையமறவோதவருள் புரியைக்—கையரென்றுன்
முன்னிற்பாரென்று மொழிந்தேன்போற்கற்றுணர்ந்தோர்
மன்னிப்பாரென்று மறா.

இன்னூற்பயன்

ஆசிரியவிருத்தம்.

சந்திரபானிலக்கணமுங்கொளுநாளுந்
தங்கியபக்கங்கரணமியோகம்வாரம்
வந்துசொல்லுஞ்சோதிடத்தையறியாதர்கள்
மனவினைவாயறியுவகையுளதோவென்ன

விந்தவுடலுயிர் நிலையையறியாதாருக்
கெமாமறியவியம்பும்வகையாதோவென்னிற்
பைந்தொடியேயான்சொல்லுஞ் * சரநூறன்னைப்
பரிந்துநீபாரென்று பரமன்சொல்வான்.

(இ-ள்.) சந்திரன்-சூரியன் கோள்-நாள்-பக்ஷம்-கரணம்-யோகம்-வாரம் இவைமுதலாகச் சொல்லப்பட்ட சோதிடவிலக்கணத்தை யறியாதவர்கள், தத்தமன நினைவினாலே யறிந்துகொள்ளுமார்க்கம் உள்ளதோ உண்டாகின் அருளிச்செய்ய வேண்டுமென்று உமையவள்கேட்க சங்கரனார் சொல்லுகிறார், அழகிய வளையல்கள் பூண்ட கைகளுடைய பெண்ணே யான்சொல்லுஞ் சரநூலாகிய விந்தச் சாஸ்திரத்தைப்பரிவுடன் பார்ப்பாயாக, பார்க்கில்கண்டுணர்வையென்று சொல்லுகிறார்.

சொல்லாரு நெடுங்கயிற்றின் வருணமான சூத்திரனார் தவக்கெனுமாசிர்மந்தன்னி, னல்லாருமுக்கணுங் கயிறுகோத்து நலந்திங்காய்வருகின்ற நஞ்சுட்கொண்டு, மொல்லாதகாலப் பாம்புண்டுமிழ்ந்துபூதலத்திற்பிறந்திறந்து போவரேனு, மெல்லாருமியாஞ்சொல்லுஞ் சரநூறன்னை யிகழாதரர்சுரர்சூழ்ங்க ரிகழ்வோர்தாமே.

(இ-ள்.) சொல்லப்பட்ட நாற்புரிகூடிய நீண்டகயிற்றைப்போதபாரம்பரையால் விர்த்தியாகிவராநின்ற பிரம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திராதி வருணாசிரமம்பெற்ற அந்தமானிடதேகத்தில் இச்சரம் நாசிகையின்வழியால் நின்று எருதுக்கு ஒருணுக்கணுங்கயிரிருந்து ஆட்டுவிப்பதுபோல நன்மைதீமையென்று நஞ்சினையூட்டுவிக்கும் அப்படிப்பட்டநஞ்சினையூட்டக்கொண்டு கொடியகாலனென்னும் பாம்பானது உண்ணவுமுமிழவுந் தாமுட்பட்டு இருவினைக்கிசைந்தவராய்ப் பிறந்துபிறந்துபோவார்கள், ஆயினும் நான்சொல்லிவருஞ் சரநூலையிகழாமல் குருமுகாந்திரத்தில் அறிந்து அனுபவித்து அந்நெறியினிற்பவர்கள் யாவரேனுமொருங்கே தேவராவார்கள் அப்படி யறியமாட்டாதவர்கள் ஊமைகளுக்குச் சரியாவார்கள்-எ-று. (உ)

சரம்பார்க்க ஆசனவிதி கூறுகின்றார்.

மூங்கிற்பாய் மிடிகல்லுநோய்மண்டுக்க முறிபலகைநன்மையிலைமுடைந்தபுல்லு, நீங்கிவிடுங்கீர்த்தி தழைமனநடுக்க நிகரில்லைந்தோல்ஞானநிறைபுவித்தோ, லோங்கியசெல்வம்விடுமுன்குளைப்புவொளிர்துகுநன்மையுயர்படந்தானென்று, தூங்கிய தூக்கம்போக்நன்மையாகத் துலங்கியவாதனத்திருந்து நோகைசொல்வாம். (கு

* சாம என்பது, காற்று-மனம்-சீவன் சுவாசம்-மூச்சு-பிராணன்-ஆவி-உயிர்-உயிர்ப்பு இவை முதலாகச் சொல்லப்பட்டவைதான் என்றறிக.

(இ-ள்.) மூங்கிற்றடுக்கு ஆதனம்-வறுமை, கல்-வியாதி - மண் ஆதனமில்லாமல் வெறுமணலில் (உளுக்கார்ந்து கொண்டால்) துக்கம், உடைந்த அல்லது அறுப்பட்டபலகைமணை நன்மையில்லை, கோரைப்பாயல்கள்முதலிய புற்பாயல்கள் கீர்த்திநாசம், பச்சிலைதழை மனநடுக்கம் மான்றோல், ஞானம, புலித்தோல், செல்வம், தர்ப்பாசனம்,மோக்ஷம்,வெள்ளைவஸ்திரம் தீமையில்லை, சித்திராசனம் அல்லது இரத்நகம்பளம், நன்மை இவைகளில் நன்மையாக விளங்கும்படியான ஆதனத்திலிருந்து (சரம்பார்க்கவேண்டும்)மற்றுஞ்சொல்லுகிறேன்கேள் மயில்போலும் அழகியபெண்ணே.எ-று.

சரம்பார்க்குமார்க்கங் கூறுகின்றார்.

சொல்லியவாதனங்கள் பலவற்றுணன்றற்றுய்ய பங்கயாதனமாயிருந்துதோன்று, மல்லலுற்றேகமனமாக்கியொட்டியாண்பந்தபிராணாயமங்கள்பண்ணி, மெல்லையிலுந்தியின்கீழா மெழுத்தைப் பற்றியேழுபத்திராயிரநாடியிலீரைந்து,நல்லனவாயதின்மூன்றுநாடியோடுநலந்தருப்பேரவ்வெழுத்தை நவிலப்பாரே.

(இ-ள்.) முன்கூறப்பட்ட வாதனங்கள் பலவுண்டு, அவைகளில்தீங்கில்லாத ஒரு ஆதனத்திற், பதுமாதன மென்னப்பட்ட அங்கமாயிருந்து (பார்க்கும்போது) மனதுக்கு மிகவும் நினைவில்லாமல், ஒரேமனமாக்கி ஒட்டியாண பந்தமென்றுசொல்லும் பிராணாயாமஞ்செய்து அதன்மேற்பார்க்கில் எல்லையில்லாத திருவருளுக்கிடமாகிய உந்தியின்கீழிருக்கு மெழுத்தைத்தொடங்கி எழுபத்திராயிரம் நாடிகள் இந்தத்தேகத்திலுண்டானவை தெரியும் அந்நாடிகளுள் பத்துநாடிகள் நல்லனவாம் அப்பத்து நாடிகளுள் மூன்றுநாடிநல்லன அம்மூன்றுவழியாய்த் தான் சரம் எளிதிற்காணவோடும் இவையறியப்பெரிதாகிய நன்மையளிக்கும் அவ்வெழுத்தைப்பார் மான்போலுங் கண்களையுடைய பெண்ணே-எ-று. அன்றியுமிதன் விவரத்துக்குமற்றும் வருவனவற்றுள் ௯௫-வது கவிலையப்பார்க்க.

தவ்விவிழியாயிதய கமலர்தன்னி னன்றுகவசவையுயிர் நடக்கும்போதுஞ், செவ்வியுடன்மீளும்போ திருபத்தோராயிரத்தறுநூறைச்செபிக்கி லொருநாளாகு, மவ்வியமூலாதாரஞ் சுவாதிட்டான மணிபூரம்நாகதம் விசுத்தியர்களை, பவ்வமற யாஞ்சொல்லுஞ் சரநூறன்னைப் பார்ப்பவரேபராபரத்தின் பயன்பார்ப்பாரே.

(இ-ள்.) மான்போலும் விழிகளையுடைய பெண்ணே இருதய கமலத்தின் வழியூடுருவிக்கொண்டு யாதொருதீங்குமில்லாமல் அச

ரென்னப்பட்ட இச்சரம் நாசிகையின்வழியாய்ப் போகும்போது (௪-அங்குலங்கள்போக) மற்றவை செவ்வையாய்த்திரும்பி வரும் போதும் (கணித்துப்பார்க்கில்) இருபத்தோராயிரத் தறுநூறுதரம் நடக்கும், அது ௬௦-நாழிகைசேர்ந்த ஒருநாளாகும் அப்பரிசெல்லாம் மூலாதாரம், சுவாதிஸ்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்கினை என்றுசொல்லப்பட்ட பரவிலையின் பரிசுதான் (அங்கிருந்து உண்டாயினவென்னுங்கருத்து) இதனைக் காணும்வழியாதெனில், யாஞ்சொல்லுஞ் சரநூலைமயக்கமறப்பார்ப்பதுதான் அப்படிப்பார்ப்பவர் பரமாகவும் அபரமாகவும் விளங்குகின்றஒரு வஸ்துவினுலுண்டாகும் பிரயோசனத்லைதயறிந்துகொள்வார். (ரு)

சந்திரர்சூரியர் சுழிமுனை இலக்கணமும் மற்றும்

யாத்திரைபலனுங் கூறுகின்றார்.

பார்க்கிலிடையிடமதுவேதிங்களாகும்பகலவனும்பின்கலையே வலமதாகும், மேற்கவுரைசுழிமுனைதானடுவாமங்கிவிடையானசந்திரனேயமுதமாகுந், தீர்க்கமுடன்பொருள்விளைக்குங் கரியவண்ணந் திராசியாமவனேசெப்புங்காலை, வேற்றடங்கண்மடமாதே விரும்பக்கேளாய் விரிவாகவிவையனைத்தும்விளக்கிச்சொல்வாம்.

(இ-ள்.) ஆராய்ந்துபார்க்கில் இடைகலையென்பதுவே யிடதுபக்கம் நாசியில்வருஞ் சுவாசம் அதுவே சந்திரகலை யென்னப்படும், பினகலையென்பதுவே வலதுபக்கம், நாசியில்வருஞ்சுவாசம் சூரியகலையென்னப்படும், யாவருக்கும் ஒக்கசொல்லுங்காலத்தில் சுழிமுனையென்பது நடுவாகும், அக்கினியென்னப்படும் பின்னும் அந்தச்சந்திரனைச் சொல்லுமிடத்தில் அமுதம் தீர்க்கமாக எப்பொருள்களையும் உண்டாக்குவன் நிறங்கருத்தவன் ராசியில்திராசி, வேல்போலுங் கண்ணினையுடைய பெண்ணே மற்றுமுண்டாகிய வனைத்தும், பரிஷ்காரமாகச்சொல்ல அதனை நீ விருப்பமுற்றுக் கேட்பாயாக-எ-று.

அறியும் அச்சுழிமுனை இரண்டு நாசிகையிலும் பரவியோடும் அதற்குப் பூரணமென்றும் பெயர். (சு)

இ து வு ம து.

சொல்லுங்காற் கதிரவனுஞ்சகவியாபி சுத்தநிலம்வெண்லைமசராசியாகும், கொல்லுமெலாக்கருமங்கள் கொடியவன்னி கூறுங் கானிறஞ்சிவப்பாமுபயராசி, நல்லவிடைதெரிந்துணர்கிற் றிங்கள் பெண்ணும் நலம்பயில்பின்கலைக திரோன் புருஷனுகுஞ், சொல்லுமிருபதின்காதவழிக்கப்பாலாந் திசைக்கிடமாய்ச்செவ்வலமூர் சேரக்கேளே.

(இ-ள்.) சூரியனுடையகுணகுறிகளைக்கொள்ளுமிடத்தில் அந்தசூரியன் உலகத்தில் வியாபகமுற்றவன் பரிசுத்தமானவெண்மைநிறத்தையுடையவன் ராசியில் சரராசி, சுழிமுனையென்னும் அக்கினியைச்சொல்லவென்றால் சகலகருமங்களையுமழக்கும், பொல்லாதநிறம் அக்கினிசிவப்புராசியில் மேற்சொல்லிய விரண்டுராசியுங் கூடினது இன்னமும் நன்றாய்தெரிந்துபார்க்கில் இடைகலையென்றுசொல்லப்பட்ட சந்திரன் பெண்பால் பின்கலையென்று சொல்லப்பட்டஅந்தசூரியன் ஆண்பால் (சுழிமுனை யென்னப்பட்ட அந்த உபயராசியானது அஃறிணைப்பால்அல்லது அலியாகும்) அன்றியும் இருபதின்காதவழிக்குமேற்பட்ட தலைவானதேசத்துக்குப்போகிறபோது புறப்பட்டுச்சூரியகலையோடும்போது அத்தேசத்தில்போய்ச்சேரவேண்டியது இன்னமுஞ்சொல்லுகிறேன்கேள்—எ-று.

சந்திரனிறக்கணம் அதிலும்அச்சந்திரனடக்கும்போது

இன்னவைசெய்யலாமென்று கூறுகிறார்.

கேட்கிலிடர்தூதாடை பணிபொன்பூண்ட லிளர்க்குமணமடிமை கொளற்கிழ்நீர்காண்டல், வாழ்கைபனையெடுத்தல் குடிபுகுதல் விற்றன் மன்னவரைக்காணலுண்மைமருவல்சாந்திவேட்கை தெய்வப்பதிட்டை சுரம் வெறுப்புத்தீத்தால்வித்தைபெறற்றனம்புதைத்தன்மிகவுமீத,ளுட்கமலமலர்முகத்தாய்நரகர்தீர்த்தனன்றேபாமிவைவெல்லா நயர்துபாரே.

(இ-ள்.)சந்திரகலை இடதுநாசியி னடக்கும்போதுஎந்தெந்தகாரியங்கள் செய்யலாமென்று வினவிக்கேட்கில் அந்த இடகலையில் ஒருவரைத் தூதனுப்புதல் தூது தானேபோகுதல், புதியவஸ்திரந்தரித்தல், ஆபரணாதிகள்பூண்டுகொள்ளல் விவாகஞ்செய்துகொள்ளுதல்) தாலிகட்டல் ஒருவனையடிமையாகப்பெற்றுக்கொள்ளல் கிணறுமுதலியகுளம்ஏரிவெட்டுதல், வாழும்படியானவீடுமனைவாங்குதல் ஒருவீட்டிற்குக் குடிபோகுதல், ஒருவஸ்துவைவிற்குதல் நூதனமாய்உண்மையாகிய வஸ்துவைச்சார்தல் சாந்திகழித்தல் இஷ்டதெய்வ பிரதிஷ்டைசெய்தல், சுரந்தீர்த்தல்வெறுப்புதீர்த்தல் ஒருவனைச்சமாதானஞ்செய்தல்கல்விகேட்டுக்கொள்ளுதல், தனந்தானிய முதலிய ஆஸ்திசேர்த்துவைத்தல், தியாகங்கொடுத்தல், பாவவிமோசனஞ்செய்தல் இவையெல்லாம் நன்மையாகும் மற்றக்காரி

பங்கள்மத்திபமென்றறிக அன்று மலர்ந்த தாமரைப் பூப்போலு முகத்தினையுடைய பெண்ணே—எ-று, அன்னமுமிதிற் செயலறிய வென்றால் ௪-அ-ங், கவியையும்-௪-எ-ங் கவியையும்பார்க்க. (அ)

சூரியனிலக்கணம்அதிலும் சூரியனடக்கும்போது
இன்னவைசெய்யலாமென்று கூறுகின்றார்.

பார்க்கில்வலத்துபதேசம்வித்தைசேவை படையோட்டல்ப யிர்செட்டுக் களவுசூது, போக்கொணு வழக்குரைத்தல்கரி பரிதே ரூர்தல் யிறங்குமொழுத்திடுதல்சங் கீதம்பாடல்வார்த்தை பகைப ங்கக்கோள்பசாசுதீர்த்தன் மந்திரஞ்சாதித்தல்மருந்துண்ணுறங்கற் கோத்தபுனலாடலகொல்விடங்கடீர்த்தல் கொடும்பிணி தம்பன யோகங்குறிக்குங்காலே.

(இ-ள்.)வலதுநாசிகையில் சாரமோடும்போது எவைசெய்ய த்தக்கவையென்று விசாரித்து பார்க்கும்போது, தாம் குருவுப தேசம்பெற்றல் ஒருவருக் குபதேசம்பண்ணல்வித்தைபாராயணஞ் செய்தல்வித்தை யொருவருக்கோதல், ஒருவனைவணங்கல் எதிரியி னுடையபடையைத்துரத்த, பயிர்விளைத்தல் வியாபாரஞ்செய்தல் திருடல்சூதமாடுதல் ஒருவனுலுந் தீர்த்தற்கரியதாகிய வழக்குபே சல், இயானை-குதிரை-தேர்-இவைகளிலேறி சவாரிபோதல் விளங் கவரும்படியான எழுத்தெழுதல் - சங்கீதம்பாடல்பேசத்தொடங் கல்பகைமையுண்டாக்கல் ஒருவனைப்பங்கம்பண்ணல், கோள்சொ ல்லுதல்,பசாசுஒட்டுதல்மந்திரசிட்டைசாதிக்குதல். மருந்துசாப்பி டுதல்போசனம்புசித்தல், நித்திரைசெய்தல்ஸ்நானஞ்செய்தல்கொ ல்லுதற்கேதுவாகியவிஷங்களைநிவர்த்திசெய்தல்கொடியவியாதியை த் தீர்த்தல், தம்பனயோகசானஞ் செய்தல் இவைகளை யெல்லா ங் குறித்தனுபவித்துப்பார்க்கில்நன்மையாகும் எ-று. மற்றிச்சூரி யசந்திரர் இருவருக்கும் விபரசசு-ங் கவியையும்-அ-ங் கவியையும் பார்க்க.

சுழிமுனை பூரண சூரியபலன் கூறுகின்றார்.

காலிரண்டுமொத்தக்காற்சமாதிநன்றாங் கருதியதொன்றுகா துகாணுமெனிற்காணு, சிலமிருந்தவமுடையாய் நன்மையில்லைநி யானவாங்கருமஞ் சேரக்கூடுஞ் சாலநிறைபூரணத்தில் வழங்குவா து தர்க்கம்போரங்கமன்னர்தம்மைக்கண்டான், மூலமறுஞ்சூனிய த்தில் நிறுத்திவெல்வர் முயல்வதெல்லாங்கயல்விழியால்முயலலா மே.

(இ-ள்.) சுழிமுனையா யிரண்டுசாரமும் ஒத்தோடுகையில் என் னவைசெய்யலாமென்றால் சமாதியோகஞ்செய்தால்,(சுருதிகாரண

க்களையச் சும்மாவிருக்குதல்) நன்மை, நினைத்தகாரியம்ஒன்றே னுமாகாது, அப்போது ஒருவன்வந்துஇப்பொருளகப்படுமோவென்றாலது அகப்படாது, சிலம்பொருந்திய தம்முடையபெண்ணே, இந்தச்சுழிமுனைநடக்கும்போது நன்மையே கிடையாது, கெட்டகாரியங்களெல்லாம்பலிக்கும். இது இங்ஙனநிற்க (சரம்) மூக்கில் எந்தப் புழையில் ஒடுகின்றதோ அந்தப்பக்கம் பூரணமென்றும் சரம் ஓடாதபக்கம் சூனியமென்றும்பேர், இப்படியான குறைவில்லாதபூரணபக்கத்தில் நின்று வழக்குப்பேசுகிறவர்களை, தர்க்கம் பண்ணுகிறவர்களை, சண்டைபண்ணுகிறவர்களை, ஒருவன்போய்க் காணில் அரசனை அல்லது தமக்குமேற்பட்டவனை இவ்வாறுகூறப் பட்டவர்களை இதனால்காணலாமென்று ஒருசாட்சியும் இல்லாதபடி சரமோடாதபக்கமாகிய சூனியபக்கத்தில் நிறுத்தினால் பூரண பக்கத்தி லிருக்கிறவன் வெல்லான் அல்லாமலும் ஒருவன் இப்படிப்பட்டவர்களைத் தனக்குச் சரமோடாத சூனியபக்கத்தில் நிறுத்தினால் அவன்பேச்சே மேலாய்வெல்வன், எவ்வெவற்றை எவ்வெவ்வாறு நாட்டமுற் றறியவேண்டுமோ அவ்வவ்வாறே யறியலாம் சேல்மீன்போலுங் கண்களையுடைய பெண்ணே-எ-று.

யாத்திரை பிரயாணம் போகும்போது சரம்

இசைவு பிசகாயிருந்தால் அதற்கு உபசாந்தம் கூறுகின்றார்.

முயலுங்காற்பூரணத்தி லிடத்திரண்டடிபோமுன்வலமென்
மூன்றடிபோ மொழியும்யாத்திரைக்கு, கயலடருங்கண்மடவாய்
கருமமதுமுற்றுங் கருதுவடக்குங்கிழக்கு மிடத்தேபோகி லியலு
மொருபகையுண்டா மீளமாட்டா ரிசைந்தவலந் தெற்குமேற் கே
கவென்னிற், புயலடரும்புனல்புகுந்து மரணமாவார் புணர்முலைக்
கச் சிறுமிடையாய் போற்றிக்காணே.

(இ-ள்.) பின் ௧௬-ங்கவியில் சொல்லியபடி மேற்றிசையும், தென்றிசையும், சந்திரன்றிசை-வடக்கு-கிழக்கும், சூரியன்றிசை. இது இங்ஙனம்நிற்க சொல்லப்பட்ட யாத்திரைபோக நாடியவன் சந்திரனில் சந்திரன்றிசையேபோகவேண்டியது, சூரியனில் சூரியன் திசையேபோகவேண்டியது, அல்லாமலும் முன் எழாங்கவியிற் சொல்லியபடி இருபதின்காதவழிக் கப்புறமான தலங்களுக்கும் சந்திரனில்புறப்பட்டுச்சூரியனில் ஊர்போய்ச் சேரவேண்டியது, அப்படிசேரத் தருணபேதமாய்ச் சரமுமிசைவுபிசகாய் மாறியோடினால் (அதற்கு உபசாந்தம்யாதெனில்) சூரியகலையிற் போகவேண்டிய திக்கின் யாத்திரைக்குச் சந்திரகலையாயிருந்தால் அந்தக்

சந்திரன் சுவாசத்தையேறவுள்ளேயிழுத்துப் பூரணமாக்கி இந்தக் காலையே இரண்டுதரமுன்னிட்டு வைத்து பின்பு சுதாவாய் நடந்து வழியில் கொஞ்சதூரம் நிற்காமல்போகவேண்டியது (இதுசாந்தி) சந்திரன்பலன்கெட்டுப்போகும் தீமையில்லை சந்திரகலையிற்போக வேண்டிய திசையின்யாத்திரைக்குச் சூரியகலைபாயிருந்தால் சூரியன் சுவாசத்தை ஏறவுள்ளேயிழுத்து அக்காலையே மூன்றடி முன்னிட்டுவைத்துப் பின்பு சுதாவாய்நடந்து வழியில் கொஞ்சதூரம் நிற்காமல்போகவேண்டியது, (இது அதற்குச்சாந்தி) சூரியபலன் கெட்டுப்போகும் தீமையில்லைசேல்போலுங் கண்களையுடைய பெண்ணே போகிறகாரியம் ஜெயமாகும், இப்படியல்லாமல் வடக்குத்திசையும் கிழக்குத்திசையும், (யாத்திரை) சந்திரநடக்கும்போது போனால், போகிறவிடத்தில் ஒருவனுக்கொருவன் விரோதப்பட்டுப்போவான், திரும்பமாட்டான், மேற்குதிசையும் தெற்குதிசையும் சூரியகலை பாயும்போது யாத்திரைபோனால் சலத்தினால் அல்லது, மழையினால் இறந்துபோவார்கள் கச்சினாலிறுசி நெருங்கிய தனங்களையும், இப்போதுதானற்றுப்போவதுபோற்றோற்றுகின்ற இடையினையுமுடைய பெண்ணே விசுவாசித்துப்பார்-எ று

ஒருவனுக்கு நன்மைதீமைசொல்லு மார்க்கங்

கூறுகின்றார்.

காணவொருகருமத்தைக் குறித்துவந்தேன் கருதியமுன்னுமிடமேலுமின்று, பேணுவலமுங்கீழும் பின்னும்வெட்டியோன், பேசியசொல்லெழுத்திரட்டை சோமனுக்கு, மாணுமெழுத் தொற்றையேற்கதிரோனுக்கு, மதிக்குமவன்பூரணத்தில்வந்துகேட்கிற், பூணவுரைத்தனவெல்லாநன்றேயாகும், பொல்லாதுசூனியத்திற் புகலுவோர்க்கே.

(இ-ள்.) நாம் விழையுங்காரியம்நன்றோ-தீதோ கண்டறிவோமென்றுவந்தவன் முன்-௧௦ ங்கவியிற் சொல்லியபடி சூரியகலைநடக்கும்போது, அவன் அப்பூரணபக்கமாகவே, யிருந்தானாகில் அவன்பொருந்தச்சொன்ன காரியங்களெல்லாம், அவனுக்குச் சித்திக்கும் அப்படியில்லாமல் வலதுபக்கத்தில் நின்றாலும், சரம் பார்க்கிறவன்மேலிருக்க வந்தவன் கீழிருந்துகேட்டாலும், நேர்நேரே பின்னிருந்துகேட்டாலும் அச்சூரியகலைக்குடைய பலிதமே சொல்க, சந்திரகலை நடக்கும்போது அப்பூரணபக்கமாகவேயிருந்து வினவினாகில் அவன் சொன்ன காரியங்களெல்லாம் அவனுக்குப்பலிக்கும். அப்படியில்லாமல் இடதுபக்கத்தில் நின்றாலும், நேர்நேரே முன்னேநின்றாலும், மேலிடத்திலிருந்தாலும், அச்சந்திரகலைக்குடைய குணமே சொல்க, இதுதவிர சரம்ஓடாத சூனியபக்

கத்தில்நின்று கேட்டானாகில் அவன்கேட்டகாரியம் பொல்லாதாகும். பலிக்கமாட்டாதென்க அல்லாமலும் அவன்முதல் வாய்திறந்துசொன்ன வார்த்தையின் எழுத்தை யெண்ணிப்பார்த்து ஒற்றைப்படங்காகில் சூரியனுடையகுணஞ்சொல்க, இரட்டையாகில் சந்திரனுடைய குணஞ்சொல்க, மேல்-கீழ்என்றது, மெத்தைவிட்டையும், கிணறுமுதலிய பள்ளகுழிகளைக் குறித்தென்றறிக, இப்படியாக, சு சு வகையிற் சொல்லியிருக்கின்றதே இவையெல்லாமேககாலத்தி லொத்திருக்கவேண்டுமென்பதில்லை, ஏதாவது ஒன்றைப்பார்த்துச் சொல்லலாமென்பது கருத்து மற்றும் வருவனவற்றுற்காண்க இன்னமும் விரித்துச் சொல்லுமளவில் சந்திரனுடைய திசையும் பக்கமும் அது சூனியமானாலுஞ் சரிதான் திரணமாயினது நன்மையுண்டே யல்லது வியர்த்தமாகாது, இதற்குப் பிரமாணம் (சு-ங்) கவியிலும் (எ-ங்) கவியிலும் சந்திரனைத் திராசியென்றுஞ் சூரியனைச் சராசியென்றுஞ், செப்பியிருப்பதனையறிக, இக்கவிகளில் உரி-பண்பு-அல்லது அடைமொழிகளை சோரவிடாமல் பதவுரையாய்ச் சொல்லி வருவோமென்றால் விரிவுரைக்கு இசைவுபட்டு வருவதரிது ஆயினும் அவ்வுரிகளைமாத்திரம் சேர்த்துக்கொண்டு வருவோமென்றால் ஒருஸ்திரியானவள் தன்புருஷனுக்கு அமளியிற் சம்போககாலத்தில் கால்-கை-படுதல் முதலிய கற்புமை தவறுதல்கூடாதென்று அங்குமவைகளை யிருக்கக்காண்பிக்கப் புகுவாள், புகுந்தால் அச்சதிபதிகள் கொண்டகருத்து ஒருமித்துத் தடையின்றி நிறைவேறுமோ எறுதுபோல இங்கும் விகாரமில்லாமல உரைபுணர்வுற மாட்டாதாதலால் சமையவுச்சிதமாய் நேர்படுத்தவும் கிராகரிக்கவுமாயிற்று-எ-று. கஉ

இதுவுமது,

அதின் முன்-ம-ங்கவியிற்சொல்லிய பூரண

சூனியங்களின்விகற்பங்கூறுகின்றார்.

கேடென்றேன் பறிகொடுத்தோனஞ்சுகின்றேன்கிடையினிற்காதென்றேன் கிளர்நோய்கொண்டோன், பாடொன்றுமில்லை சூனியத்தேயாகிற் பலித்துவிடும் பூரணத்திற் பகர்ந்தவெல்லாம், ஆடம்பையரவென்ன வல்குலாளேயடுத்தொருவன்வந்திசைசொன்னால், நீடுஞ்சொல்லிரவியா நினைந்தமொழியாகாது கின்றயாரே

(இ-ள்.) ஒருவன்வந்துநானின்னதனால்கெட்டுப்போனனென்றாலும், நானின்னதைப்பற்றி கொடுத்தேனென்றாலும் விடங்கடித்

தது அல்லது விடமுண்டேனென்றாலும், இதோ படுக்கையிற்று னேபிராணன்போகின்றது என்றாலும் அல்லது இவைமுதலாகச் சொல்லப்பட்ட, அபாயகுணகுறிகள் எவையாயினுஞ்சரிதான்சரம்ஓடாத தனிப்பக்கமாய்வந்து நின்றானாகில் ஒருவருத்தமுமில்லை நிவர்த்தியாகிப்போகுமென்க அப்படியல்லாமல் சரம் ஓடுகிறபக்கமாகிய பூரணபக்கத்தில் வந்து நின்றுசொல்லுவானாகில்வர்தவன் எப்படி எப்படிச்சொன்னானோ அப்படி அப்படியே லபித்துபோகும் பறிபோன பொருள்வராது நஞ்சுமீளாது படுக்கையினோயாளிதேறான் அன்றியும் சூனியத்தில் எவனாவதுவந்து எதையாவது சொன்னானாகில் அது ஒரு காலத்தில் அபதமானவார்த்தைகளானாலுமாகும் பூரணத்திற்சொன்னசொல் உண்மையாயிருக்கும் இதல்லாமலும் ஆடும்பையரவென்வல்குலையுடைய பெண்ணே வந்தவனுடைய திசையும்-கஉ-ம் கவியிற்சொல்லியபடி எழுத்தையும் எண்ணிப்பார்க்கில் அவன்திசைசந்திரன் கூறாகவும் முதற்சொன்னசொல் சூரியன்கூறாவுமிருந்தால்மேற்சொல்லிய காரியங்களுக்குக் கிஞ்சித்து மத்திபமாயினு முழுமோசமல்ல இன்னமுஞ் சொல்லுகிறேன்கேள்-எ-று.

## கருப்பக்குறி கூறுகின்றார்.

கேட்டவனுருயிர்தன்னி லேறிநிற்றற்கிளர்லகயிலுருருளவை பிடித்துநிற்றல் வாட்டமறவருமதலே யிடத்திற்பெண்ணும் வலமாகினின்றுரைத்தல் மைந்தனாரு மீட்டமில்சூனியத் துரைக்கிற்கேடோகு மிருஞ்சுழினேயேயுரைக்கில் வலியேயாகு நாட்டுமொழி சூனியம் பூரணத்தேயாகி னடுக்கமுடன் மகவுயிர்க்குக் கிடக்குமன்றே.

(இ-ள்.) ஒருவன் கர்பத்தைக் குறித்துக் கேட்குங்காலத்தில் வந்தவன் ஒரு சிவன்போ லேறிக்கொண்டிருந்தானாலும் உயிருள்ளயாதொன்றைக்கையிற் பிடித்துக்கொண்டிருந்தானாலும் ஒருசிவனைத்தொட்டு நின்றானாலும் அவன்நின்றபக்கம் வலமாகில் அதிலும்பூர்ணமானாற்றான்பெண்ணே ஆண்பிள்ளைபிறக்குமென்க இடமாகில் பூரணமானாற்றான்பெண்ணே அப்படிபூரணபக்கமில்லாமல் சூனியப்பக்கமாயிருந்து எதனைத்தொட்டுநின்றாலும்சும்மாநின்றாலும் வலமாகில் ஆண்தான் இடமாகில் பெண்தான் ஆனால்பிறக்கிறபிள்ளை சாகும் அப்போது சரம் பார்க்கிறவனுக்கு சுழிமுனையாயிருந்தால்பிள்ளை இறுநவினதல்லாமலும்;பெண்ணுருவினதல்லாமலும் அடியகுமெக்கி இப்படிதவரினவன்முன்வலத்தில்நின்று அவன்வந்தகாரியத்தை சொல்லிக்கொண்டபின் இடத்தில்வந்துநிற்கில் தாய்வயிற்றி லிருக்கின்றபிள்ளை வருத்தப்பட்டு பின்பிறக்குமென்க எ-று: அன்றே அசைக்கிடைக்கின்ற மைந்தனுஞ் சூனி

கெற்பக்குறியும் போர்வெல்லுக்குறியுங் கூறுகின்றார்.

யத்திற்கேடாங்கெடாதிருவர்போருவது சூனிமத்திலோது வடிக்கின்றமொழியின் முதற்சொன்னோன்றோற்பன் மருவியபூரணத்தின் பின்புசொன்னோன்றோற்பன் நடக்கின்ற சுழிமுனையில்வேட்டலர்கள்போர்த ணட்பாகுமவத்தியங்க நடப்போன் வெல்வன் இடத்தியங்கிலேர்தடிபோபெதிர்த்தோன்வெல்வனிருஞ்சுழினை திற்கிவிடரில்லைபாரே.

(இ-ள்.) இதற்குமுன்கவியில் சூனியத்திற் கேட்டபிள்ளை மரிக்குமென்றாலும் போர்வழக்குவாதைக்குறித்து ஒருவன்வந்துஇன்னவன் எவன் வெல்வானென்றால் வந்தவன் சூனியபக்ஷத்திலிருந்து சொன்னானெில் முன்சொல்லப்பட்ட பெயரையுடையவன் தோற்பன் பூரணமாகில் பின்புசொல்லப்பட்ட பெயரையுடையவன் தோற்பன் அப்போது சாம்பார்க்கிறவனுக்குச் சுழிமுனைநடந்தால் அவ்விருவருமொருமித்துப்போவார்கள் இதல்லாமலும் சண்டைவாதவழக்குநோக்கிறவனுக்கு அப்போது சூரியகலையாயிருந்தால் வெல்வன் சந்திரனாயிருக்கிறவன் தோற்பன் சுழிமுனையாகில் ஒருமித்துப்போவார்கள் அப்படி சந்திரகலை நடக்கப்பெற்றவன்முன் (கக-ங) கவியிற் சொல்லியபடி சாந்தையுள்ளிழுத்துப் பூரணமாக்கி அச்சரம் நடக்கிறகாலேயேமுன்னிட்டுஐந்தடிபோய்ப் பின்புநேர்நடந்தால் வெல்வன்-எ-று.

சரத்தின் ஸ்பரிசங்கூறுகின்றார்.

பார்க்குங் காலிடமெனினும் வலமெனினுமொக்கும் பஞ்சபூதந்தியக்கம் பகருங்காலை சாற்றியதண்டுடன்சேரிற் பிரிதிவியாந்தப்பாமலப்பினுக்குத் தாழ்வோடு மேற்றிசையைநோக்கியெழு மங்கிவாயு மெய்யுணர்ந்தோற்புறத்தோடு மேன்மைகுன்று நீர்த்துரையா நாற்றிசையுஞ் சிதரியோடனெடுவானென் றுரைத்திடுநீ நிலத்துளோர்க்கே.

(இ-ள்.) இடைபின்கலை-சுழிமுனை.என்றுசொல்லப்பட்ட இம்மூன்று கலைகளையும் அவற்றிபெங்க ளாறுபவத்லையும் பரிக்ஷித்துப் பார்க்குங்காலத்தில் ஒத்துவரும் அந்தநாடிகளுக்குள் பஞ்சபூதியங்கள் நடப்பதுண்டு அவற்றைத் தேர்ந்தனுபவிப்பதே அறியதாகும் யாதெனில் மூக்கிலிருந்துவருகிற சரம் அம்மூக்குத்தண்டைச் சார்ந்துவந்தால் பிரிதிவின்கூறென்றறிக கீழ்நோக்கியோடில் அப்புவியின்கூறென்றறிக மேலாகப்பாய்ந்தால் தேயுவின்கூறென்றறிக அத்தண்டிற்குநேராகியமற்றொருபுறத்தைசார்ந்துவிடு

ஞல் வாயுவின்கூறென்றறிக இப்படி நான்குபக்கங்களுள் ஒருபக்கமல்லாமல் அந்நான்குபக்கமும் கலந்துநடந்தால் அதுஆகாயத்தின் கூறென்றறிந்து உலகத்துள்ளவர்களுக்குச் சொல்லென்றவாறு இப்பஞ்சபூபதிவம் இடத்திற்கும் வலத்திற்கும் ஒன்றுதான்.

## சரத்தின்வடிவமும்நிறமும் அச்சரத்தின்ரசக்கியமும் கூறுகின்றார்.

நிலம்பொன்மை பிரதநெடுங்கோணநான்கா நீளம்பன்னிருவிரலா நீர்தான்வெண்மை இலகுபிறைவடிவுகண்டந் துவர்த்திக்குமெட்டிரண்டு விரலோடுமெரிதான்செம்மை நலங்கொண்டமுக்கோணமழற்சிமேலாம் நாளிரண்டுவிரலோடுநெளிர்கானீலத் துலங்குபுளியறுகோணமொருபக்கத்திற் றுய்யநால்விரலோடுஞ்செல்லுங்காலே

(இ-ள்.) பஞ்சபூதியசரம் நடப்பதை இன்னமெப்படிக்கண்டு தெளியலாமெனில் பிரிதிவுசரம் பொன்மை அப்புச்சரம் வெண்மைதேயுச்சரம் செம்மை வாயுச்சரம்கருமையாயிருக்கும் (அப்போது கண்டத்தில் எவ்வித உணர்ச்சியாகுமெனில்) பிரிதிவுக்கு கண்டந்தித்திக்கும் அப்புவிற்கு துவர்க்கும் தேயுவுக்கு உவர்க்கும் அல்லது அழற்சியாயிருக்கும் வாயுவுக்குப்புளிக்கும் (எவ்வடிவாயிருக்குமெனில்) பிரிதிவுஎன்கோணம் வாயு அறுகோணம் அன்றியும் அத்து ஒடுகிறநீட்சியைச் சொல்லுங்கால் பிரிதிவு பன்னிரண்டங்குலம்-அப்பு கசு அங்குலம்தேயு அ அங்குலம் வாயு ச அங்குலமென்றறிக இதல்லாமலும் இக்கவியில் இரதமென்று தனியே போட்டபடியினால் முதல் இரசமாகவேவைத்துக்கொள்ளலாயிற்று உலகத்தவருக்குச் சொல்லுங்காலத்தில் இப்பேதங்களையவர்களறிவது அறியவென்று ஒரு பூதியத்திற்குநான்கு குறிசொல்லியிருக்கின்றார் ஒன்றில்லாவிட்டாலும் மற்றொன்றிலாவதுதெரியவேண்டியது-எ-று. கஎ

## இதுவும் அதுவுடன் அப்பூதிநடக்கையில் செய்கருமங்களின் குணகுணங் கூறுகின்றார்.

சொல்லியவான் வடிவதுநான் வட்டமாகுந் துய்யதொருவிரலெல்லாஞ்சற்று மொல்லைநிறம்படிகங்கைப் பிரதம்வாயுமோடிவரும் பூதங்கட்குளதே சொல்க மல்லனில் நீர்க்குமிகுபயனுகுஞ் செந்தீ மத்திபமாம் பகர்காலும்மானுந்திதாம் பலவணையாய் சாம்பார்ப்போன் தன்னைப்போற்றி பாகிலேயென்றேதியிட்டுப் பணிந்துபாரே.

(இ-ள்.) ஆகாயபூமியும் நடக்கும்போது நிறம்படிகம் இரசம்கண்டங்கசக்கும் வடிவு வட்டம் நீட்சி ஓரங்குலம் இப்படியாக

பூதிகங்களின்குணங்களைச் சொல்லவெனில் பிரிதிவுக்கும் - அப்புக்கும்-உத்தமம்-தேயு-மத்திபம் - வாயு ஆகாசமும்தீதாம்வளையல்களைத்தரித்தகரத்தையுடையபெண்ணே சரம்பார்த்துக்குறிசொல்லுகிறவனுக்குத்தாம்பூல முதலானவைகள் கொடுத்து உபசாரங்கள் செய்து பின்கேள் எ-று. இங்ஙனம் கீழ்க்கமுன்-எ-அ-ங-கவிசொல்லியபடி சூரியசந்திரகலையிற் செப்பவேண்டிய கருமங்களும் இக்கவியை யனுசரிக்கவேண்டியது சஅ-சகூ-ங் கவியைப் பார்க்கவேண்டியது அதிலும்சரம் பார்க்கிறவன் தாயபூலர்தரித்துக்கொள்ளுகையில் வினவிகேட்கிறவனுக்குஞ் சொல்லுகிறவனுக்கும் நன்கு ஒருவன்பேரைக் குறித்து வினவில் அவனுக்குறியவைகளை கூறுகின்றார்-எ-று.

பாராகுமுதுகுசேர் காலதாகும் லைபந்தழல்மார் தவனங்கைப்படர்வான்சென்னி, பேராமல்வினவினபோதிந்நபூதம்பேர்படைத்த விடங்களிலே பிழையில்லாம லோராகுபூரணமாம் பக்கந்தன்னிலே வெட்டுங் கோல்படுதலிசைத்ததெல்லாங் கூராழிமால்வந்து விலக்கினுலுங் குறையாமல் வடுப்பங்காண் குறிக்குங்காலே.

(இ-ள்.) முன்-கடு-ங் கவியிற்சொல்லியபடி இருவரைச் சுட்டிக்காட்டாமலும் சூனியபக்கத்திலிராமலும் பூரணபக்கமாக விருந்து சண்டைக்குப்போகிறவன் என்னவனெனில் ஆயுதங்களினல் காயம்பட்டுவருவானென்றுசொல்க அதிலும் அப்போதுபிரிதிவு நடந்தால் முதுகில்படுமென்க, அப்புவாகில் காலில்-தேயு - மார்பு வாயு-கை-ஆகாயமாகில்தலையிற் படுமெனச்சொல்க விஷ்ணுதேவன்வந்து விலக்கினுலுந் தப்பித்துக்கொண்டு வரமாட்டானென்க

இந்தவிந்தப்பூதியத்துக் கிந்தவிந்த ஆயுதமெடுத்துப் போகுக

வெனவும் அத்திக்கில்விடத்தினிற்கவெனவுங்கூறுகின்றார்.

கால்மூலைதொடங்கியழன் மூலையேறக்கயிறெனவேகீறி மதிகதிரோனுக கோலமேற்குந் தெற்குமதி நிலமாங்கொள்க கொழுங்கதிரோன் கிழக்குவடக்காகக்கொள்க சேல்போலுநெடுங்கண்ணுய் புடக்குங்கத்திசேர்ந்தசலம்வானழக்குச் சிலைகாலுக்கு மேற்றண்டாம்மாணுக்காயுதங்கல்லேந்தி விதித்தநிலத்திற்பொருதல் வெற்றியாமே.

(இ-ள்.) மேற்கூறியபடி சமர்செப்ப வேண்டில் வாயுமூலை தொடங்கி அக்கினிமூலையளவாகஒருகயிறுபிடித்தாற்போற்சரியாய்பாவனைசெய்து அதில் மேற்கையுந் தெற்கையுஞ் சந்திரன்கூறுகவும், வடக்கையுங்கிழக்கையுஞ் சூரியன்கூறுகவுங் கொண்டு போர்செய்கிறவனுக்கு அப்போது சூரியனை இயங்கில்தான் அச்சூரியன் றிசையிற்றுனே நின்று எதிரியைச் சந்திரன்றிசையில் நிறுத்திச் சமர்செய்யவேண்டியது அப்படிச்செய்கையில்(சந்திரனுனுஞ்சரி சூரியனுனுஞ்சரி எடுத்தறியு மாயுதங்கள் எவையெனில் (சேல்

போலும் நீண்டகண்களையுடையபெண்ணேபிருதிவாகில்-கத்திஅப்புவாகில் வாள்-தேயுவாகில் - வில்வாயுவாகில்தண்டு ஆகாயமாகில் கல் இப்படியாக அந்தவந்த பூதியங்களுக்கு அந்தவந்த ஆயுதங்களேந்திவிதித்தபடி இந்தனிலத்தினின்று சண்டைசெய்தால் வெற்றியுடையவன்-எ-று.

நோய்க்குறி கூறுகின்றார்.

ஆகிடநோய்ப்புருடருக்காய் புருடர்வலங்கேட்கி னாறுமென்க மாதருக்குமாதரிடங்கேட்கிற் சோமிலிம்முறைதப்பிற் பொல்லாதென்க தொலையாதுநாட்சென்று மீளுமென்க தோகைநில நாட்செலு நீர்கடுமீளுஞ்சுடுதழனுண் மூன்றுதப்பிற் றுஞ்சபிபண்ணுமோகிடுங் காளுளிரண்டின் மிகுந்தாற் கொல்லுமெழில்வான் மன்றுதப்பி லிறக்கும்பின்னே.

(இ-ள்.) புருடன் கொண்ட பிணிக்காகப் புருடனேவந்துசரம்பார்க்கிறவனைக்கண்டு இந்நோய் லகுவாமாவெனவினவிலு மந்நோய்தாவினையாம், சரம்பார்க்கிறவனுக்கு வலதுபக்கத்தில் நின்றுகேட்கிலும் நிவர்த்தியாகும் ஐயமில்லை ஸ்திரீகொண்ட நலிக்காக ஸ்திரியேவந்து வினவினுலுங்குணமாகும்வந்தவள் அவனுக்கு இடதுபக்கத்தில்நின்றுகேட்கில் மீளும் சமுசயமில்லை (முன்பதின்மூன்றாங்கவியிற் சொல்லியபடி சூனியபக்கமாகவே யிருந்தாலுமுத்தமம்) இப்படியல்லாமல் ஆணுக்குபெண்வந்தாலும் பெண்ணுக்கு ஆண்வந்தாலும் அவ்வியாதி தீர்வது துல்லபம் அன்றியும் ஒருவன்வலதுபக்கத்தினின்று குறிகேட்டுக்கொண்டே இடதுபக்கத்தில்வந்து நின்றாலும் ஒருத்தியிடதுபக்கத்தில்நின்று குறிகேட்டுக்கொண்டே வலதுபக்கத்தில்வந்துநின்றாலும் நோய்போக்கு கடினம் ஆயினும் மெல்லனநாட்சென்று சொஸ்தப்படும் அப்படியப்படியேசரியாய்வந்துகேட்கில் அவன்நோய்நீங்குமென்க அதிலுமெப்போது நிருமெனில் அந்நேரம் பூதியம் பிருதிவாகில் கொஞ்சநாட்செல்லுமென்க அப்புவாகில் விரைவிலென்க அக்கினியாகில்மூன்றுநாட்களில் விமோசனமென்க மிகுந்தாற்கொல்லும் வானமாகில் அன்றைக்கேநோய் பிரிந்து காணும் மிஞ்சில் மறுநாள் மரிக்குமென்க-எ-று. ௨௧

இதில் முன்கவியிற்சொல்லிய வியல்பும் அதன்மேற் கவிகளிற்
செப்பியபூதியங்களின்குணமும்முன்-கூ-ங-கவியிற்
கூறியபடி சரம்பார்க்கிறவன் ஓரிடத்துக்குப்
போகவேண்டியது இத்தருணமென்றும்
பேசவேண்டியது இத்தருண
மென்றுங் கூறுகின்றார்.

இறக்குமுபயர் தனக்கைந்து நாளிலே இனக்காற் சாவில்லை
யிதுதான்மெய்யே பிறக்குமொரு பூதந்தினைத்து பூதப்பிரிந்தோடு

மதிகுரவன்பேசக்கேட்டுச், சிறப்புடையபயன்றெளிவ தல்லானு லின்செயலதனுற்றேவர்களும்தெரியமாட்டார், சிறக்குமதிக்கிருந் தழைத்தால்வந்துகேட்டா னீள்வெயிலாச் சிலசொல்கள் கினைந்து கேளே.

(இ-ள்.) இதற்கு முன் கவியிற்கூறிய பூதியங்களி னியற்கையாகிய குணங்களுக்குரியவை சொல்லக்கூடாது அதற்குமுன்(சம-ங்) கவியிற்சொல்லியபடி சுழிமுனை நடக்கில் ஆகுமென்பது ஆகாது ஆகாதென்பது ஆகும்போல இப்போதும் ஒருவன் நோயைக்குறித்துக் கேட்கும்போது சுழிமுனைநடந்தால் அந்நோயாளி ஐந்துதினங்களுள் மரிக்கும் அப்படி மரிக்காமல் தப்பினுல் அவனுக்கினியொருவிமத்து வருமளவும்சாகான் இதுமெய்மை அன்றியும்முன் (கச-ங்) கவியிற் சொல்லியவண்ணம் ஒருபக்கமோடுகிற சரத்தில் ஐந்துவகைப்பட்ட பூதியங்களுண்டு அப்பூதியம் ஒவ்வொன்றுக்கும் ஐந்துபிரிந்து நடப்பனவுண்டு அவையெவையெனில் ஒரு பிருதிவுக்கு பிருதிவிற் பிருதிவு பிருதிவிலப்பு பிருதிவிற்றேயு பிருதிவில் வாயு பிருதிவில் ஆகாயம் இப்படி இவ்வைந்துக்குள்ளேந்தா யோடும் இதனையும் மற்றின் நூற்பயன் யாவையுங்குருமுகாந்திரத்தினறிந்துகொள்வதல்லால் தேவர்களே யானுலுந் தனியே சுருதியைகொண்டுஅதைத்தள்ளிச் சுவானுபவத்தால் இந்நூலைக்கொண்டே அறிவதுகூடாது அல்லாமலும் சரப்பார்க்கிறவனை ஒருவன் வந்தழைத்தால் அவன் சூரியகலை யியங்கும்போதே போகவேண்டியது பேசுகிறதானுலும குறிசொல்லுகிறதானுலும் சூரியனியங்கும்போதே சொல்லவேண்டியது மற்றப்படி கூடாது மிஞ்சில் நடக்கில் மந்திரமென்றறிக இன்னமுஞ் சொல்லுகிறேன் மனதிற்றுக்கேள்-எ-று.

முன்-கசு-ங்கவியிற் சொல்லிய பூதியசரங்களி
னியல்பு கூறுகின்றார்.

கேளிதனைநிலத்திற்கு நீரிற்குங்குணமாங் கெற்பமெனிலாணுகுங் கிளந்தொருவன வினவி, ஞானமும்மலாபங்கள் சாந்திபோக்கு நயன நன்ருகுமங்கிதனி லங்கம்வெல்லும், வாளமரிற் பொல்லாது கெற்பங்கேடாம் வாயுவெனிற் பெண்ணுகு மற்போர் தோர்க்கு, நீள்விசும்பிற் றனுவித்தையோகந்தானு நீடுமிககெற்பமெனி லவிபாய்விசும்.

(இ-ள்.) பெண்ணேகருத்திற்றுக்கேட்பாயாக,முன்-கசு-ங்கவியிற்சொல்லிய பூதியசரங்களினியல்பு கூறுமிடத்தில் பிருதிவும் அப்பும் நன்மைகளேயேதருவன் இதன்பின் (ந-ங) கவியிற் சொல்லியபடி ஐந்நாழிகைக்கு மிஞ்சிநடக்கையில் இவ்விரண்டு பூதியங்க

ன் அதிகமாக நடந்தால் லாபமுண்டு வேண்டில் கஅ-ங்கவியையும் பார்க்கில் ஈதிங்ஙனம்மிற்க முன் கச-ங்கவியிற் சொல்லியபடி ஒரு பிராணியைக் கைப்பற்றுதும் அதின்பேரிலூர்ந்து நில்லாமலூர்ந் தனியேவந்து சூனியத்தினில்லாமல் பூரணத்தில்நின்று கெற்பக்குறி கேட்டால் அப்போது சரம்பிருதிவாவது அப்புவாவது நடந்தால் ஆண்பிள்ளை பிறக்குமென்க சு-வது-கவியிற் சொல்லியபடி சாந்தி பண்ணுதல போக்குகழித்தல் செய்யவேண்டியபோது அங்ஙனஞ் சொல்லியகலையில் இவ்விரண்டு பூதியங்களிலேதாவதுநடக்கும்போது செய்தால் பலிக்கும் இதன்றித் தேயுபூதியம் நடக்கையில் பொராங்கம் புரியில் வெல்லும் அப்போரில் வாளெடுத்தால் மத்திபமாம் அப்போது கெற்பத்தைக்கேட்டால் அதுஅழிந்துபோகும் வாயு நடக்கையிற் கெற்பம் பெண்ணுமென்க மற்போர் தோல்வியடையும் ஆகாயமாகில் விற்சமர்செயிக்கும் இப்போரிலக்கணஞ்செப்பிய உ०-ங் கவியையும் கஅ-ங்கவியையும் க०-ங்-கவியையும் பார்க்கவும்-கூ-ங்கவியிற் சொல்லியபடி போகபெரியசன்மை ஆகாயச் சரம் நடக்கையில் கெற்பங் கேட்டால் அலியாய்ப்பிறக்கும்பிறந்து மிறக்கும் என்க-எ-று. உகூ

திதிவாரம் நட்சத்திரகால்சரபலன் முன்-ச-ங்-கவியிலும்-கூடுங் கவியிலுஞ்சொல்லியபடி பிராதகாலத்திற் சரம்பார்க்கவே ண்டியகிரமத்திலும் விசேஷமாய்பார்க்கவேண்டியது இதுவென்றுங் கூறுகின்றார்.

வியாதபிரமைமுதல் விளங்கும்பக்கம் விரவிவருமுப்பத்திரும்மூனறுக மாயாதுவருஞ சோமனிடமாக வருகினற வருக்கனுக்கும வலமதாகச் சாயாது புதனவெள்ளி திஙகண்மூன்றுந தப்பாதுசந்திரனும் சாற்றுஙகால் தேயாதுகதிர்செவ்வாய் சனிவியாழனு செஙகதரோன் றினமென்றுதேறநீயே.

(இ-ள்.) முன் ச-ங் கவியிலும் பின்-கூடு-ங்கவியிலும் சொல்லியபடி பிராதகாலத்தில் சரமபார்க்கவேண்டிய கிரமததினும்விசேடமாய்ப் பார்க்கவேண்டியது பொதுவெனில பொழுதுவிடிய- டு-நாழிகையிருக்கையில் எழுந்துமேல்-ச-ங்கவியிற் சொல்லியபடி சரம் பார்க்கும்போது வளர்பிறை பிரதமைக்கும துவிதிகைக்கும்- திரிதிகைக்கும-சந்திரகலையுதித்து நடக்கவேண்டியது இப்படி இம்மூன்றுக்கு புன்னிரணடும வரேக தேய்பிறையில் பிரதமைக்குந துவிதிகைக்குந் திரிதிகைக்குஞ் சூரியகலை யுதித்து நடக்கவேண்டியது பொழுதுவிடிய-கூ-நாழிகையிருக்கையிலுதித்தசரம மற்றவைந்து நாழிகையும் கலங்காதோடவேண்டும் திதியோகவாரங்களிலவை

கிகழவேண்டியவெனில் ஞாயிறுக்குஞ் செவ்வாய்க்குஞ் சனிக்கும் வியாழத்திற்கும், சூரியகலையுதித்தோடவேண்டியது திங்களுக்கும் புதனுக்கும் வெள்ளிக்குஞ்சந்திரனுதித்தோடவேண்டியது இப்படி யுதிக்குஞ்சரம் எந்தப்பூதியத்தி லுதிக்கவேண்டியதெனில் பின் - உடுங் கவியைப்பார்க்கவேண்டியது இதில் பூதியங்கள் அதிகமாய்க் கதித்தோடில் பயன்கள் என்னவையாமெனில் முன் (உக - ம்) கவியிற்றெரியும் அன்றியும் விபரம் - ௩௩ - ம் - கவியிற்காண்க - எ - று.

இதனுள் நக்ஷத்திரங்களுக்கு நடக்கவேண்டிய காலசரமும் இதன்மேற் கவியிற்கூறிய வாரங்களுக் குரியனவாகிய காலசரங்கள் சரிவரில் இடரில்லை பிழைக்கில் இன்ன வின்ன நிகழுமென்றுங் கூறுகின்றார்.

தேறிடுமீயொன்பதுநாள்பூரமாதி சிறந்தரோகணிசதயமுத்திரட்டாதி, கூறிடுஞ்செங்கதிரோனாகக்கொள்க கூறுநாளடையமதிக்கென்றுகொள்க, வீறிடுஞ்செங்கதிர்பிழைக்கி னேய்காரிக்குமிடித்திடுமண்டலஞ்செய்விக்கும் வெஃபோர்ச்சாவாம், பாறிடும் பொன்பிழைக்கின் மன்னர்கேடாம்புந்தி பதிக்கதிபன் கெடுமிந்துவிளைஞர்போக்கே.

(இ ள்) பெண்ணே திதிவாரமென்று இரண்டுவேறுபாடாய்க்கூறினைமென்று தியக்கம்வேண்டியதில்லை விபரம் மேற்கவிகளிற்றானே சொல்லியிருப்பதனைக்காண்க இவ்விரண்டினுள் மேல்வரும் நட்சத்திரபலனாகிய மூன்றினுள்ளும் ஏதேதுகஷ்டமோ அதிலும்ஏதேது இஷ்டமோதெரிந்து அதிலும் விக்கந்தாக்கம்நோக்கிப் பார்ப்பதென்று காண்க, கண்டுதேறிய ருஃது நட்சத்திரங்களுக்கு நடக்கவேண்டிய காலசரமாம் ஏதெனில், பூரம்-உத்திரம்- அஸ்தம்-சித்திரை-ஸ்வாதி-விசாகம்- அனுஷம்-கேட்டை-மூலம்- உரோகணி-சதயம்-உத்திரட்டாதி இப்பன்னிரண்டினுஞ் சூரியனடக்கவேண்டுமெனக்கொள்க மற்றப்பதினைந்திலுஞ் சந்திரனடக்கவேண்டும் அல்லாமலும் மேற்கவியிற்கூறிய வாரங்களுக்குரியனவாகிய காலசரங்களில் ஞாயிறு தப்பில் வியாதி-சனி வறுமை-செவ்வாய் -சண்டை-சாவு-வியாழம், தன்மன்னனுக்குக்கேடாம்-புதன்- அவ்வூரதிகாரிக்குக்கேடு திங்கள் சுற்றத்தாருக்குக் கேடுவரும் (தன்மன்னனென்பதும் அவ்வூரென்பதும் (சரம்பார்ப்பவனுக்குரியனவாம்) வெள்ளி பின்கவியிற்காண்க, சனி-கருமையுடன் தான்காண்க, சனி - வறுமையுடன் தன்கையிலிருப்பதும்போகும் பொன்பிழைக்கில்மன்னர் கேடாமென்னபதில்தன தாமென்பதில் தன்தாதாவிற்குவருந்தம்வரில்கனக்குளப்படிப்பொருள்வரும்வராது பதிக்கதிபன்கெடுமென்பதில், அவனினல் பறிகொடுக்கப்பட்டானெனவரும்-எ-று.

### இதின்மேற்கவியிற் கூறுதவெள்ளிபிறைக்கில் நிகழ்வன விவைவெனவும் மற்றதன்மேற்கூறிய திதிபிறைக் கில் நிகழ்வனவிவைவெனவுங் கூறுகின்ருர்.

போக்கரியபுகர்பிறைக்கி லூர்விட்டேகல் பொருந்தியதோர்
மெய்ந்நூலோதல் புணர்ந்தோர்சாத, லாக்கமதிலிடராமுற்பக்கந்
தன்னி லருங்கலகமிரண்டாகிலர்த்தநாச, மூர்க்கமுடன்மூன்றதனி
ல்போக்குண்டாகு முரைத்தநான்கிற்கிளைஞர்க்குறுநோயுண்டாந்,
தேக்கியவைந்திற்றேச மலையுமாறிற் செகத்தரசர்கெடுமேழிற்சே
ருநோவே.

(இ-ள்.) வெளிதப்பில்தான்வசிக்கும்பதியைவிட்டு ஒழிந்துபோ
தலாகவேணும் அவ்வெல்லையைவிட்டு மற்றேரெல்லையைப்போய்
மிதிப்பதாகவேணும் வரவர தேகம் நலிவரும் தன்மனைவிக்குச்சா
வுவரும் சாவென்பதில் சண்டைபிணக்கு நோய்முதலிய வருத்தமா
தலையும் சதிபதிகளுக்கும் பொருத்தம் போதலையுங்காண்க, நூலா
சிரியர் புணர்ந்தோர் சாதலென்றும் சரமுடிவரைக்கும் வருத்தம்
வருமென்றுந் துணிந்து கூறினமைபால்நன்மை யதேவாருக அட்
டமாசித்திமட்டும் பெருகுமென்ற கருத்துக்கண்டு இதன்மேற்கவி
யில் கூறியது காண்க, மற்றதனிற் சொல்லியபடி ஊருக்கு மன்ன
னுக்கும் அதிகாரிக்கும் வந்தாலும்வரும் இதன்றியில்வளர்பிறைகா
லத்தில் பிரதமைதப்பில் யாதேனுமிடர்வரும் துவிதிகை- கலகம் -
திரிதிகை-பொருட்சேதம், சதுர்த்தி-போக்குண்டாகும்(சகலவித
நஷ்டத்துக்குங்காண்க) பந்துக்களுக்கு வியாதி-சஷ்டி - அத்தேசத்
தாருக்கும் அரசனுக்கும் வருக்கம் சத்தமிநலி- அரசனுக்குந் தே
சத்தாருக்கும்நோயுண்டு தனக்கில்லையென்ற மாத்திரத்திற் கூடா
வாகுங் கன்னுலே யவர்களுக்கு வருத்தம்வந்ததென்ற அவதுாறுன
பொச்சாப்பினாலாவது தான் வருத்தப்படவருமென்றவிவரம் மே
ற்கவியிற்றுனே செப்பியிருப்பதனைக்காண்க-எ-று.

### திதிபிறைக்கில் நிகழ்வனவிவையென்றும் சந்திரசூரியரியல் பின்கூறுகின்ருர்.

நோவுடனேசாவுமாமெட்டாகின்மற்றை நுவலாதபக்கமுமிம்
முறையேகொள்க, தாவில்வெங்கதிரவனின் மதியமுண்டாஞ் சந்தி
ரனுள்வெங்கதிருந் தப்பாதுண்டா, மோவரிய விவர்களையே யுண
ரு போதிலுற்றசரங்குருமுகத்தா லுணர்ந்துகொள்க,தேவர்பிரா
னுரைத்தருள வுமையாள்கேட்டச் செல்விபிதன்முறைமைதனைத்
தெளிந்ததேறே.

(இ-ள்.) அஷ்டமிபிறைக்கில் நோவுடன்சாவுவரும் வளர்பிறையி
ன்னமிருக்கத் தேய்பிறைக்கு மிம்முறையேகொள்வதுஇதல்லாம
லும்சூரியனுக்குள்சந்திரனும்சந்திரனுக்குள்சூரியனுமொன்றுக்கு

ளொன்றுசரந்து தோன்றுவதுமுண்டாம் உமையவளே தன்சுய வல்லமைஆனல் தெரிந்துக்கொள்ள வல்லவளல்லவளாகிப்பின்சங் கரனருளினால் தெரிந்துகொள்ளத்தக்க சிறப்பிதாகில் இந்நூலை யார்தான் தம்மாற்றானே தெரிந்துகொள்வர் கொள்ளமாட்டார் கள் ஆதலால் குருவருளினாற்றெளிக-எ-று. உஎ

மேற்கவிகளிற் கூறிய சரம் பிழைக்கில் இடர்வரும்

வந்தாலும் அதற்கு உபசாந்தம் கூறுகின்றார்.

தெளிகயர்சேய் மூன்றடியாந் தெற்குமந்தன் செம்பொன்மூ ன்றடிமேற்குத் திங்கள்வெள்ளி, இளகியநா தடிவடக்குப்புந்திமுன் போ லிரட்டையதுகிழக்கிரவி பெழுதன்முன்னே, வளமுடனே பூ ரணபக்கத்திற்சென்று வந்திருந் தநமைநினைந்துவழுத்தல்செய்தே, உளமகிழ்ந்து போகிலெல்லாம் பலிக்குந்துன்ப முண்டாகவிவைய னைத்து முணர்ந்துதேறே

(இ-ள்.) பெண்ணே மேற்கவியிற்சொல்லியபடிகாலசரஞ்சரி ப்பட்டுவருமோ வாராதே ஊழ்வினைப்படிக் கல்லவோ நடக்கும் அதை நம்முடைய வசமாக்குதற்குஇலேசானத்தளர்வுற்றிருக் கவேண்டியதில்லை சரம்பார்க்கிறவன் முன்கவிகளிற் சொல்லியப டி பிராதகாலத்தில் அருணோதயத்திற்கு முன்பனழுந்து ஞாயிறு- செவ்வாய்க்கிழமைகளுக்குத் தென்புரமாய் மூன்றடிமுன் கக-ங- கவியிற் சொல்லியபடி சரத்தைபூரணமாக்கி யக்காலையே முன்னி ட்டுக்கொண்டுபோகவும் சனி-வியாழங்களுக்கு மூன்றடி மேற்கே போகவும் திங்கள் வெள்ளிக்கு-நாலடிவடக்கேபோகவும் புதனுக் கு இரண்டடிகிழக்கேபோகவும் இப்படியாகப்போய்வந்து ஒருதி வ்வியமாகிய ஆதனத்திலிருந்து என்னைநினைந்து துதிசெய்து பின் னெழுந்து எங்கேசென்றாலும் அல்லது அங்கேயிருந்தாலும் முதற் கவிகளிற்கூறிய துன்பங்கள் யாதேனுமடாது-எ-று. உஅ

இதன்மேற் கவிகளிற்கூறிய ஒருவாரத்திற்குச் சாந்தப்பில்

இன்னவையாமெனவும் ஏழுநாட்களுஞ்சரிவரில் இன்

னின்னவையாமெனவுங் கூறுகின்றார்.

தேறுதியிவையெல்லாஞ்செவ்விதமாக செங்கதிரோன்றன்னா ளிற்றிங்களோடி, மாறிவருங்கதிரவனுஞ் சோமனாளின் மறிந்தோ டிவருங்கிழமை பேழுமாறிற் கூறுபடவுடலுயிர்விட் டேகுமென்க குணமாகுமிக்கிழமை கோணாதோடிற், சிறிவருங்காலனையுஞ் செ யிப்பார்மற்றச் சித்தயோகத்துநிலை சித்தியாமே.

(இ-ள்.) இவையெல்லாந் தேர்ந்தறியசூரியனடக்கவேண்டிய நாளிற்சந்திரநடந்து சந்திரனடக்கவேண்டிய நாளிற் சூரியனடந்

து இப்படியாக மாறுபட்டு ஒருவாரமுழுதும் நடந்தால் மரித்துப் போவன் அப்படியல்லாமல் கிழமை ஏழுந்தவருமல் மேற்கண்ட நாழிகையுங்கோணமல் திக்குநோக்கிச் செல்வதுடன் பிராணயாமமுமாருமல் நிகழ்ந்துவருமாகில் இயமனடாரான் பிராணனுக்கழிவில்லை சிவன்முத்தனாய் வாழ்ந்திருப்பன் அஷ்டமாசித்தியு மவனுக்குச் சித்திக்கும்-எ-று. உகூ

குறிசொல்மார்க்கங் கூறுகின்றனர்.

சித்தமுடனிரேசகத்தில் வந்துகேட்டாற் செப்பியவப்பொருள்களெல்லாந் தீதேயாகும், உத்தமமாம்பூரகத்தில் வந்துகேட்டாலுரைத்தபொருளத்தனையு முண்மையாகு, மெத்தியகும்பத்துரைத்தினன்றேயாகும் வேண்டாரைரேசகத்தில் விளியப்பார்க்க, வைத்தமலம்வாயுநீர் கழிபோதென்னின் மாற்றலர்தாங் கெடுவரிது மாரிலாதே.

(இ-ள்.) சரம்பார்க்கிறவன் ரேசகஞ்செய்போதில் வந்துகேட்டால் கேட்டகாரியஞ் சித்தியாது பூரகத்திலென்னில் நன்மை அவன் சொல்லுகிறது முண்மையாகும் கும்பகஞ்செய் காலத்திலாகில் நற்காரியம் அதுசித்திக்கும், மலம்சலம் வாயுகழியும்போதானல் பகைவர்கெட்டுப்போவார்கள் இன்னமிதற்கு விபரம்குருமுகாந்தரத்திற் றெரிந்துகொள்ளவேண்டியது அல்லாமற் றெரியாது-எ-று. ௩௦

சனிவியாழன் பகல் கூறுகின்றார்.

மாறிவளர்தக்கங்குளரயு மபக்கமதிநாடிகதிர்நாடிவளர்பெசன்னேடிற், பேறுமிகவுண்டாகும் பிராணயிற்கும் பின்புரைத்தகாரியங்களெல்லாம்சேறுங், கூறுகின்றசனிநாளிற்பகலிரவிற்குலவுசரம்வலமிடத்திற் கோணுதோடி, ஜுமலர்ப் பெருந்திருவே சொன்னேமிந்தஞாலமெங்கும் புகழ்பெறவோடக்குமென்றே.

(இ ள்.) வளர்பிறை வியாழத்திற்குச் சந்திரனுந், தேய்ப்பிறை வியாழத்திற்குச் சூரியனுந்தப்பாமல் நடந்துகொண்டேவந்தால் சிறந்தபேறுண்டாகும், ஜீவன்முத்தனாய்த் தளர்வின்றிவாழ்வான், இதல்லாமல் சனிக்கிழமைக்கு இரவிலும்பகலுஞ் சந்திரசூரிய சரங்கள் மாறுபாடில்லாமல் நடக்கவேண்டியது நடந்தால் இவ்வுலகமெங்கு மெச்சத்தக்க கீர்த்திவந்தறும் மற்றும் முன் காலசாஞ் சொல்லியகவியை நோக்கவேண்டியது-எ-று. ௩௧

குறிச்சொல் மார்க்கங்கூறுகின்றார்.

நட்புடையவொருவனென்கே யென்றொருவன்கேட்டில் ஞனிலத்திலகத்திருப்பகன்னீர்முற்றம், அடற்குமழுவாகிலுள்ளூர்வாயு வேற்றூரம்பலமென்மலைமேற்றுயிலலாகும், விடப்போனுக் புவி

க்குகில நீர்க்குமீண்டான் லெவ்வழற்குவருகின்றான் வெயில்காது க்கு மடற்குழலாயூர்தந்தான் வானமாகில் வருவனொரு நாழிகை யின் மாறிலாளே.

(இ-ள்) ஒருவன்வந்து இன்னானெங்கே யிருக்கிறானெனில் அப்போது சரம் பிருதிவாகில் வீட்டுக்குள்ளிருக்கிறான், அப்புவாகில், முற்றத்திலிருக்கிறான் தேயுவாகில் அக்கிராமத்தெல்லைக்குட்டானேயிருக்கின்றான் வாயுவாகில் எல்லைக்கப்புறப்பட்டான் ஆகாயமாகில் மலையேறுகிறான் அல்லது அங்குகிறான் என்று சொல்ல வேண்டியது இதுவிட புறத்தேசம் போனவனைக் குறித்துக் கேட்டபோது பூதியமைந்தில் முதலாகில் அவ்வூரில்தானே நிலையாயிருக்கிறான் இரண்டாகில், திரும்பிவருகிறான் மூன்றாகில் திரும்பினவன் நில்லாமல் நடந்துவருகிறான் நான்காகில் அவனிருக்கு மூருக்குள் வந்தான் ஐந்தாகில் ஒருநாழிகைக்குள்வந்து வீடுசேர்வானென்று சொல்லவேண்டியது-எ-று. ௩உ

இச்சரம் மனதுடன் லயப்பட்டால் இன்னவையாமெனக் கூறுகின்றார்.

மாறிவருவாயுமனோலயந்தன்னிற் மசிக்கவுயிர்சித்திநிற்கவது தானிற்கும், கூறுசமயக்கூற்றாற்பயமுமில்லைகுறித்திருமண்ணொன்றரை நாழிகையாய்க்கொள்க, தேறுபுனற்கொன்றேகால்வன்னிக்கொன்று சிவன்முக்கால் வானமரைசிறந்தநாடி, பாருமைந்துநாழிகைக்குள் வரினற்குன்றிற் பழுதுபடுமுடம்பிலிறுபற்றுப்பாரே.

(இ-ள்) இடதுபக்கத்திலும் வலதுபக்கத்திலும் ஒன்றைவிட்டொன்றை மாறிமாறி நடக்குமிச்சரமானது தேகத்தினூடே லயப்பட்டுப்போகுமேயானால் பிராணனுக்கழிவில்லை அப்படி லயப்பட்டிருக்கில்மனமுதலிய வந்தக்கரணங்களும் வேலையில்லை அசைவற்றிருப்பனவாகும் பின்பு மற்றெச்சமயத்தாராலும் பயமில்லை யமனாலும்பயமில்லை முன்சொன்னபடி இடதுபக்கமும் வலதுபக்கமும மாறியோடுஞ்சரம் ஒவ்வொருபக்கத்தி லெண்ணேரந்தரித்து நடக்குமென்னில் ஐந்துநாழிகையில்-ஒன்றரைநாழிகையும்நீரில்-கவம் நெருப்பில்-க-ம- காற்றில்-முக்காலும்-வெளியில்-உ யும்ஆகநிறைந்தோடும் இப்படியாகிய பூதியங்கள் கூறுகொண்ட ஐந்துகடிகைகளும் ஒவ்வொருபக்கத்திற்குச் சரியாய் சிதையாதோடவேண்டியது இதைவிடகுறைந்தாலும் வளர்ந்தாலும தேகநஷ்டமாம் சரயலயப்படுமவழி தேடவேண்டியது தேடில்முனகண்ட பயனுண்டாமில்லையேல் நாலடியொன்றுகரு ஐந்துநாழிகையும் பூதியங்களினளவே சிதறாமல் நடப்பிக்கவேண்டும் அதுவுமின்றெனில் தேகஹானியேவரும்-எ-று. ௩௩

## தத்தமது வாழ்நாட்பிரமாணமறியும்படி அயனபங்கற்பங் கூறுகின்றார்.

பற்றிநான்சொன்னபடி யயனமுன்னாட் பகலொருபோதுண்டுபடுகத்தனுகி. மற்றைநாளுத்தமமாமயனந்தன்னின்மாரிடந்தனிலேரில்வலந்தெற்காகும், பெற்றதொரு நாழிகைதானைந்துநூறும் பெறுங்கடிகை தனிற்குறைபிற் பிராணனுசை, முற்றேழுமிமாநாழிகைக்கோராண்டுதாழு முமையேநான் சொன்னகணக் குண்மைதானே.

(இ-ள்.) சரம்பார்க்கிறவனுக்குச் சென்றநாட்கள்போக மற்றும் நின்றநாட்கள் எவ்வளவோ என்னுங்கருத்துகொண்டு பார்த்துத்தெளியுமாறுயாதெனில் அயனசரமாம் அதனைப்பார்ப்பதெவ்வாறெனில் தைமாதமுதற்றேதியில் உத்திராயணகாலம் ஆடிமாதமுதற்றேதியில் தக்ஷணாயனகாலம் இவ்வயனகாலத்திற்கு முன்னாள் பகலில் ஒருபொழுதுன்னமுண்டு தத்துவங்களைப் பரிசுத்தமாக்கித் தேகமெலிவதனால் மனத்துக்கும்மற்றவாயுவாதி கரணங்களுக்கும்வருமிடையூறினைநிருவி தைமாதமுதற்றேதியில் பொழுதுவிடிய ஐந்துநாழிகையிருக்கையில் பார்க்கும்போது-சரம்-வாரம்-திதி-நட்சத்திரங்களைத்தள்ளி இடதுபக்கத்திலுதித்து முன்கலைகளிற்சொல்லியபடி ஐந்துநாழிகைகளுஞ் சிதறாமல் ஓடுமதனைப் பார்க்கவேண்டியது இதுபோக ஆடிமாதமுதற்றேதியில் இதேபிரகாரமாய்ப் பார்க்கவேண்டியது அப்போது சரம் வலதுபக்கத்திலோடும் அப்படிபோடிய சரமுற்கூறியவண்ணம் ஐந்துநாழிகைகளுஞ் சிதறாமலோடினால் சரம்பார்க்கிறவன் தான் செய்யும் பிராணதர்ம வுதவியினால் அன்றுதொட்டுவரும் நூறுவருஷகாலம்வாழ்ந்திருப்பன் இதுவின்றி குறைந்தால் அவ்வைந்து நாழிகையை நூற்றெருமா ஐந்தாக நூறுக்கிக் குறைந்தநாழிகை ஒருமாவோ இரண்டுமாவோ அல்லதன்மேற்றொகைப் பட்டவையோ அதற்கு ஒவ்வொருவருஷத்தைக் கூட்டிப்பார்த்து குறைந்த ஒவ்வொருமாநாழிகையின்பேரில் கணக்காக்கிக் கொள்ளவேண்டியது முழுவதுமேதப்பிச் சரம் இடத்திற்குவலமாகவும் வலத்திற்கு இடமாகவும் ஓடில் அவனுக்குச் சிணகாலமென்றறிக.

## போஜனவிதி கூறுகின்றார்.

உண்பவனுக்கப்புவிளிடமதிக்கு வெய்யவுவர்த்தன கைத்தனகார்த்தலுண்கமுன்னே, பண்பயில்செங்கதிர்க்குநெய்பால்புளித்தகன்னல்பாகுடனேதுவர்த்தளமுனுண்டுபார்க்க, நண்பமைவதிற்றிற்குச்சோறுமாதி நன்னீர்கால் காற்றுக்காலாகநல்கிக் கண்பயினுடிகள்சுத்தி பண்ணிதூபங் காட்டிமலர் சூட்டியிருள் கழியுங்காலே.

(இ-ள்) முன்கவியிற் சொல்லியபடி சரம்பார்க்கிறவன் சூரியகலையியங்கி வருகிறமட்டும் போசனமில்லாமல் மற்றவனுக்காக காக்கவேண்டியதில்லை சந்திரனடக்கும்போதுஞ் சாப்பிடலாம் எப்படியெனில் உஷ்ணமான பண்டங்களும் உப்பு கசப்பு காரலாகிய பண்டங்களை வைத்துக்கொண்டு தாகபானத்தை நிறுத்தி புண்ண வேண்டியது சொல்லியபடியே சூரியமண்டலத்தில் நெய் - பால்-புளித்தல்- தித்தித்தல் துவர்த்தலாகிய பண்டங்களுடனே சாப்பிடலாம் தாகபானமுமப்போதேசெய்யலாம் சந்திரனுக்கு அப்போது கூடாதாயினும் பின்பு சூரியனடக்கில் சாப்பிடவேண்டியது இதுமாறினாலும் ஆத்திரத்தினாலும் அவாவினாலுஞ் சூரியனுக்காக காத்திராமல் அடுத்தடுத்துச் சந்திரனிற்றானே தின்றுகொண்டிவர்தாலும் நலியாமல்லது இப்படியாகச்சாப்பிடுகிறதாயினும் அவ்வுணவு வயிற்றிற்குப் பாதிதானாகும் மிஞ்சிலாகாது மற்றப்பாதிக்கு சலங்காலாகவும் கொள்ளவேண்டியது கொண்டு தசநாடிகளையும் பிராணயாமமுன்னிலையில் சுத்திசெய்து ஏகாக்கிரசித்தனாய்ச் சரம் பார்க்கவேண்டியது, எ. று.

சரத்தைபேறவொட்டாமலுங் குறையவொட்டாமலுந்தன்

வயப்படுத்திக்கொள்ளுமார்க்கங் கூறுகின்றார்.

கால்கொண்டுகணக்கறிவார்க்கியாதுந்தப்பா கருதியதெல்லா முடியுங்காண்போர்க்கெல்லா, மேல்கொண்டபுவியுடனே யப்புவன்னி விளங்கியகால்வானமுடன் வினவரற்குப், பால்கொண்டமொழியாளே பவனங்கட்டிப் பற்றியவாறுதாரப் பரிசுபார்த்துச், சால்கின்றமுதனாடி தன்னுணின்ற தபனன்மதிசெந்தழலாந் தன்மை பாரே.

(இ-ள்.) கல்போலு மினியசொல்லையுடைய பெண்ணே சரம்பார்க்கிறவனுக்கு அனுபவமின்றாற் சொல்லியபடிவருமோ மற்றவ்விதிப்படி பிறழாது போசனமுறைமையும் வந்தொத்துக்கொள்ளுமோ மிஞ்சினுங்குறையினும் நோய்செய்யுமே எளிதிற் சரிப்படவரவே வராதெனில் தானெப்படி நன்கடைவன் வினவுவார்களுக்கெவ்வாராய் நன்றெனவுந்தீதெனவு மூழறிந்தெடுத்தோதுவனென்று ஐயமுறவேண்டியதில்லை (சரம்பார்ப்பான் பரம்பார்ப்பானென்பதுபோல) சரத்தைக் கணக்கின்படி யறிந்துபார்க்கிறவனுக்கு யெந்தகாரியமானாலுந் தப்பிப்போகாது அவனைக் கண்டபேர்களுக்கும் நினைத்தகாரியமெல்லா முடியும் அதெப்படியெனில் பிரிதிவு அப்பு-தேயு-வாயு-ஆகாயமாகிய பஞ்சபூதியங்களின் கூறுகூடிய வாயினைப் பாழ்போகாமல் மனமறிவுடனேகட்டி ஆறுதாரத்திலுள்ள பரிசினையறிந்து தசனாடிகளுள்ளும்முதனாடியாகிய பிராணநாடியினின்று மற்றங்கிருந்துதித்தோடுஞ் சந்திரன் சூரியன் அக்கினி

